


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 60 திருவள்ளுவர் ஆண்டு 2056, மேழம் – மே – 2025



# தொழிலாளர் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Advisory board | – | நெறியுரைஞர் குழு |
| Apprentice | – | தொழிற் பழகுநர் |
| Automatic device | – | தானியங்கு கருவி |
| Automatic guard | – | தானியங்கு காப்பு |
| Barber tools | – | முடிதிருத்தக் கருவிகள் |
| Boiler gauge | – | கொதிகல அளவி |
| Bonded labour | – | கொத்தடிமைத் தொழிலாளர் |
| Census register | – | புள்ளிவிவரப் பதிவேடு |
| Clinical laboratory | – | மருத்துவ ஆய்வுக்கூடம் |
| Clock room | – | பொருள் காப்பறை |
| Contract labour | – | ஒப்பந்தத் தொழிலாளர் |
| Dhoby tools | – | சலவைக் கருவிகள் |
| Door keeper | – | வாயிற் காப்பாளர் |
| Driving belt | – | இயக்குப் பட்டை |
| Drum polishing | – | உருளை மெருகிடல் |
| Dust respiratory | – | தூசி மூச்சுயிர்ப்பு |
| Grind stone | - | சாணைக் கல் |
| Grinding | – | சாணை தீட்டல் |
| Job chart | – | பணிப் பட்டியல் |
| Jute mill | – | சணல் ஆலை |
| Passenger service | – | பயணியர் பணி |
| Skilled workmen | – | திறன் தொழிலாளர் |
| Store keeper | – | இருப்பறைக் காப்பாளர் |
| Washing allowance | – | சலவைப் படி |
| Work room | – | பணியறை |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, மேழம் (சித்திரை)
மே – 2025



ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்தி

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

## தமிழ்ச் சொற்பிறப்பு அறிவோம்!

சொல்வளம் மிக்க தமிழ்மொழியில் 42 ஓரெழுத்து ஒருமொழிச் சொற்கள் இருப்பதை நன்னூல் குறிப்பிடுகிறது. அவற்றுள் நொ, து ஆகிய இரு சொற்கள் தவிர ஏனைய எல்லாச் சொற்களும் நெடில் எழுத்துகளால் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ்ச் சொற்களின் பிறப்பு வரலாற்றை ஆராய்ந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'உ' என்ற ஓரெழுத்து ஒருமொழியிலிருந்து பிற சொற்கள் வளர்ந்து வந்துள்ள வரலாற்றைப் பின்வருமாறு விளக்கியுள்ளார்.

ஒ – உ = உயரக்குறிப்பு
உக = உயர்
உச்சம் = உயர்நிலை
உச்சி = உயர்ந்த வுறுப்பு, மயிர் வகிர்வு
உச்சிப் பொழுது = சூரியன் உயர்ந்த வேளை
உத்தரம் = உயர்நிலை, உயர்ந்த வடதிசை, மேல்மரம்
உதி = மேலெழு
உம்பர் = மேல், மேலிடம், தேவர்
உம்பல் = யானை
உவா = யானை
உன்னு = குதித்தெழு, மூச்சுப்பிடித்தெழு

ஒ – உ = பொருந்து
உத்தி = பொருத்தம், பொருத்தமாகச் செய்யும் திறமை
உத்தி கட்டல் = இவ்விருவராய்ப் பொருந்திவரல்
உகம் – நுகம்
நுகக்கோல் = மாடுகளைப் பூட்டுங் கோல்

உ = பின்பக்கம்
உப்பக்கம் = பின்பக்கம்
உத்தரம், உத்தாரம், உத்தரவு = மறுமொழி
உத்தரகாண்டம் = பிற்காண்டம்
உம்மை = பிற்காலம், எதிர்காலம்

இவ்வாறு தமிழ்மொழியின் சொற்பிறப்பு வரலாறு குறித்துப் பாவாணர் எழுதியுள்ள செய்திகளை நாமும் உணர்ந்து வருங்காலத் தலைமுறையினருக்கும் உணர்த்தி அவர்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை விதைப்போம்.

# இலக்கணமும் வியாகரணமும்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் வீரமாமுனிவர் விருதாளர்

## இலக்கணம்

பேச்சு மாந்தனைப் பிற விலங்குகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. அவ்வகையில் மாந்தனைப்பேசும்விலங்கு என்று குறிப்பிடுகின்றனர். பேச்சு இலக்கண நெறிகளுக்கு உட்பட்டே அமைந்துள்ளது. ஒரு மொழியைப் பேசுவோர் அனைவரும் அம்மொழியின் இலக்கணத்தின் அடிப்படையில்தான் பேசுகின்றனர். இல்லையேல் ஒருவர் பேசுவது இன்னொருவருக்குப் புரியாததாக இருக்கும். இதில் குறிப்பிடத் தக்கது என்னவென்றால் மொழியைப் பேசுவோர் அனைவராலும் அம்மொழியின் இலக்கணத்தை விளக்க இயலாது. இலக்கணம் கற்ற சிலராலேயே அம்மொழியின் இலக்கணத்தை விளக்க இயலும். மாந்தன் தான் பேசும் மொழி இலக்கணத்திற்கு உட்பட்டே பேசுகிறான். அவ்வகையில் மாந்தனை இலக்கண மாந்தன் என்று குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும் (Frank Palmer 1983:10). மொழியை மாந்தனுக்கு ஏற்புடையதாக்குவதில் இலக்கணத்தின் பங்கு இன்றியமையாதது. மொழி பலவகையான உட்கட்டமைப்புகளைக் கொண்டிலங்குகின்றது. இந்த உட்கட்டமைப்புகள் இலக்கண அமைப்புக்கு உட்பட்டே இயங்குகின்றன.

ஒரு மொழியின் அமைப்பை விளக்கும் நெறிகளின் தொகுப்பு இலக்கணம் ஆகும். மொழியியலில் இலக்கணம் என்பது ஒரு குறிப்பிட்ட இயற்கை மொழியின் கிளவியம் (clause), தொடர்மொழி (phrase), சொற்கள் ஆகியவற்றை ஆளும் கூட்டமைவு நெறித்தொகுதியாகும் என்று குறிப்பிடுகின்றனர். இந்நெறிகளைக் கற்பதும் இலக்கணம் என்று குறிக்கப்படும். இது ஒலியனியல், உருபனியல்.தொடரனியல்ஆகியவற்றைப்பற்றியதும் ஆகும்.

## தமிழிலக்கணம்

இலக்கணம் என்னும் சொல் பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது (தொல்.511:4). தொல்காப்பியமே ஓர் இலக்கண நூல். அதற்கு முன் பரந்த இலக்கியங்கள் தமிழில் இருந்திருக்க வேண்டும் என்பது சொல்லாமல் விளங்கும். தொல்காப்பியத்திற்கு முன் அகத்தியம், காக்கைபாடினியம் போன்ற இலக்கண நூல்கள்

தமிழில் இருந்துள்ளன. இலக்கணம் என்னும் சொல்லுக்கு இலக்கு – இலக்கணம் = சிறந்த நடைக்கு எடுத்துக்காட்டாக அல்லது கற்றோர் பின்பற்றும் இலக்காகக் கூறப்பெறும் மொழியமைதி (Grammar) என்று வேர் விளக்கம் காட்டுவார் மொழிஞாயிறு தெவநேயப் பாவாணர். இலக்கு+அணம் என்று இச்சொல்லைப் பிரித்தும் காட்டியுள்ளார் அவர் (பாவாணர்.1967:90).

பழந்தமிழில் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழுக்கும் இலக்கணங்கள் இருந்துள்ளன. புலம் தொகுத்தோனே போக்கறுபனுவல்' என்னும் பனம்பாரனார் கூற்றைக் காட்டிச் சிலர், புலம் என்னும் சொல் தமிழில் இலக்கணத்தைக் குறிக்கும் என்பர். இயல் என்னும் சொல் இலக்கணத்தினைக் குறிக்கும் தமிழ்ச்சொல் என்றும் சிலர் குறித்துள்ளனர். என்றாலும் இச்சொற்கள் இலக்கணத்தை உணர்த்த பெருவழக்கு எய்தவில்லை.

இலக்கியம் பரவலாகப் பல்கிப் பெருகி வளரும் காலத்தில் மொழியின் கட்டுக்கோப்பு சிதையாமல் காக்கப்படவேண்டும் என்னும் நோக்கத்தில் இலக்கண உருவாக்கப் பெறுகிறது என்று குறிப்பிடுகின்றனர். இலக்கண ஆசிரியர்கள் தாம் வாழ்ந்த காலத்திலும் அதற்கு முன்பும் உள்ள மொழிவழக்கு அனைத்தையும் கணக்கில்கொண்டு அவற்றை வகைப்படுத்திக் கூற முனைவார்கள். தமிழில் முக்கழகங்கள் நிறுவி இலக்கிய இலக்கண ஆய்வு பன்னெடுங்காலம் நடந்துள்ளது. இக்கழகங்களில் மிகப்பலவாகிய இலக்கியங்களும் இலக்கணங்களும் இயற்றப்பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பாலான படைப்புகள் காலவெள்ளத்தில் பிடிக்குச் சிக்கி அழிந்துள்ளன. கிடைத்திருக்கும் இலக்கியங்களுள் காலத்தால் பழைமையானது தொல்காப்பியம். இவ்விலக்கணமும் முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது என்பதைச் சிறப்புப் பாயிரக் குறிப்பைக் கொண்டு அறிகிறோம். மேலும்

தொல்காப்பியத்துள்ளும் என்மனார், என்ப என்பனப் போன்று சொற்கள் இடம்பெற்றுள்ளனவற்றைக் கொண்டு தொல்காப்பியத்திற்கு முன் இலக்கிய இலக்கணங்கள் பல இருந்துள்ளன என்பதை அறிகிறோம். தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள மொழி இலக்கணம் இன்றைய மொழியறிவியல் பார்வைக்கும் வியப்பூட்டும் வகையில் நிறைவாக அமைந்துள்ளது.

இந்த அளவிற்கு இலக்கணம் வளர்ந்த தமிழ் மொழியில் இலக்கணத்தைக் குறிக்கும் சொல் இல்லாமல் இருக்குமா? தமிழில் இலக்கணம் என்னும் சொல் இல்லாமலேயே விரிவான இலக்கண நூல்கள் உருவாகியுள்ளனவா? இலக்கணம் என்னும் சொல் சமற்கிருதத்திலிருந்து கடன் கொள்ளப்பட்டதா?

## மூலம்

சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி இலக்கணம் என்னும் தமிழ்ச்சொல் லக்ஷண என்னும் சமற்கிருதச் சொல்லினின்று உருவானதாகக் காட்டியுள்ளது. இவ் வகரமுதலியை அடிப்படையாக வைத்து உருவாக்கப்பட்ட திரவிடச் சொற்பிறப்பு அகரமுதலியில் (Dravidian Etymological Dictionary) இலக்கணம் (grammar) என்னும் பொருள்தரக்கூடிய சொல் இல்லை. இதை வைத்துப் பார்க்கும்போது தமிழ் மொழியிலும், தமிழிய மொழிக் குடும்பத்து மொழிகளிலும் இலக்கணம் என்னும் பொருள் தரக்கூடிய சொல் இல்லை என்பதாகப் பொருள் கொள்ளவேண்டிவரும். இதில் முகாமையாகக் கவனிக்க வேண்டியது என்னவென்றால் வடமொழியில் இலக்கணத்தை வியாகரணம் என்று குறிப்பிடுகின்றனர். இதுவல்லாமல் இலக்கணத்திற்கு மூலமாகக் காட்டும் லக்ஷண என்னும் சொல்லுக்குச் சமற்கிருதத்தில் இலக்கணம் என்னும் பொருள் இல்லை. லக்ஷண என்னும் சொல் லக் (lag) என்னும் வேரிலிருந்து பிறந்ததாகவும் சுட்டிக்காட்டுதல், மறைமுகமாக வெளிப்படுத்துதல், வேதாந்தம், அடையாளம், துல்லியமான விளக்கம், பொருள்வரையறை போன்றபொருள்கள் கொண்டதாகவும் மானியர் வில்லியம்சு சமற்கிருத அகரமுதலி காட்டுகிறது.

## வியாகரணம்

சமற்கிருதத்தில் இலக்கணத்தைக் குறிக்கும் சொல் வியாகரணம் (வ்யாகரண). இச் சொல் வேறுபடுத்துதல் (separation), கூறுபடுத்துதல் (distinction, discrimination), விளக்கம் (explanation), இலக்கணப்பகுப்பு (grammatical analysis), இலக்கணம் (grammar என்னும் வகையில் மொழியிலக்கணத்தைக் குறிப்பதாகப் பொருள்விரிவு கொண்டுள்ளது. இது வ்ய் + ஆ + க்ரு என்னும் மூன்று சொற்கள் அடங்கிய கூட்டுச்சொல்.

அடிப்படையில் சமற்கிருத இலக்கணம் செய்யுள் வடிவத்தில் இருந்த வேதங்களைப் படிக்கும் நோக்கத்தில் எழுதப்பட்டது. வேதப்பாசுரத்து மொழிக்கும் பிற்காலச் சமற்கிருத இலக்கிய மொழிக்கும் இடையே நிலவும் வேறுபாட்டைக் காட்டுவதுடன் அதனைச் சமய ஈடுபாட்டுடன் காக்க முனைகிறது சமற்கிருத இலக்கணம். இம்முறையில் முதன்முதலில் உருவானது பிராதிசாக்கியம். இது பலவாறான வேத சாகைகளில் இடம்பெற்றுள்ள எழுத்துகளின் பலுக்கலைப் பற்றியும் அவற்றின் தனியியல்பான இன்னோசை நோக்கிய ஒலியல் வேறுபாட்டைப் பற்றியதுமான விளக்க நூலாகும். பிராதிசாக்கியங்கள் வேதமொழியின் சரியான பலுக்கலுக்கான நெறிகளைக் கொண்டனவாக உள்ளன. என்றாலும் இவற்றில் மொழியிலக்கணக் கூறுகள் அடங்கியுள்ளன என்கின்றனர். குறிப்பாக இவற்றில் இடம்பெற்றுள்ள சொற்கள் அவை ஒழுங்கற்ற முறையில் அல்லது வேறு குறிப்பிடத்தக்கவகையில் அமைந்துள்ளவை கணங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவையே படிப்படியாகச் சமற்கிருத இலக்கண வளர்ச்சிக்கு வித்திட்டன என்றும் அவை எட்டு அதிகாரங்களையும் 4000 சொலவங்களையும் கொண்ட பாணினி இலக்கணத்தில் நிறைவு பெற்றன என்றும் குறிப்பிடுகின்றனர்.

வடமொழியில் வியாகரணத்தை வேதத்துடன் ஒன்றிய கூறாகவே கருதுகின்றனர். இது வேதத்தைப் பாதுகாப்பதற்கு எழுந்தது என்றும், அவ்வகையில் வியாகரணத்தை வேதத்தின் வாய் என்றும் குறிப்பிடுகின்றனர். மற்ற சிட்சை, சந்தசு, நிருக்தம், சோதிடம், கற்பம் ஆகியவற்றை முறையே வேதத்தின் மூக்கு, கால்கள், செவிகள், கண்கள், கைகள் எனக் குறிப்பிடுகின்றனர்.

வடமொழியில் வியாகரணம் வேதத்திற்கு உறுப்புகளாகச் சொல்லப்பெறும் வேதாங்கம் ஆறனுள் ஒன்று. சிட்சை (சிக்ஷா, வேத ஒலியிலக்கணம்), நிருக்தம் (நிருக்த, வேதச் சொற்பொருள் கூறுவது), சந்தசு (சந்தஸ், வேதமந்திர செய்யுள் இலக்கணம்), சோதிடம் (ஜ்யௌதிஷ, வேள்வி இயற்றுவதற்குரிய நாள்கோள்நிலை கூறுவது), கற்பம் (கல்ப, இம்மை

மறுமைக்குரிய சடங்குகளைப்பற்றிக்கூறுவது) என்பன வேதாங்கத்தின் மற்ற ஐந்து வகை நூல்களாகும். வியாகரணம் நான்காவது உறுப்பான நிருக்தத்துடன் நெருங்கிய தொடர்புடையது. வியாகரணம் சொல் சரியான பொருளை உணர்த்துவதற்குரிய அறிவைப் பெறும் வகையில் பகுப்பாய்வு செய்து சரியான சொல்வடிவத்தைக் காட்டுகிறது. நிருக்தம் சொல்லின் சரியான பொருளை உறுதி செய்வதற்கு உதவும் வகையில் மொழிப்பகுப்பாய்வு செய்து காட்டுகிறது. தமிழில் இவை போன்றனவற்றை இலக்கணமே, இலக்கணத்திற்கு உட்பட்ட எழுத்திகாரம், சொல்லதிகாரம் ஆகியனவற்றினைக் கொண்டு விளக்கிவிடுகின்றது. தமிழ் எழுத்ததிகாரம் சிட்சை என்னும் ஒலியிலக்கணத்தையும் விளக்கிவிடுகிறது.

இலக்கணம் என்னும் சொல்லைப்போலவே இலக்கியம் என்னும் சொல்லின் மூலமாகச் சமற்கிருத லக்ஷ்ய என்பதைக் காட்டியுள்ளது சென்னைப் பல்கலைக் கழக அகரமுதலி. திரவிடச் சொற்பிறப்பு அகரமுதலியிலும் இலக்கியம் (literature) என்னும் பொருள்தரக்கூடிய சொல் இல்லை. லக்ஷ்ய என்னும் சொல்லுக்கும் சமற்கிருதத்தில் இலக்கியம் என்னும் பொருள் இல்லை. உலக அளவில் சிறந்த செவ்விலக்கியத்தைக் கொண்ட தமிழில் இலக்கியத்தைக் குறிக்கும் சொல் இல்லாமல் இருக்கும் என்பதை எண்ணியும் பார்க்க வியலாது. "இலக்கு– இலக்கியம்= சிறந்த வாழ்க்கை யிலக்கை விளக்கிக் கூறும் வனப்பு (காவியம்). வடமொழியில் லக்ஷ்ய என்ற சொற்கும் இலக்கான பொருள் என்றே பொருள் கூறுவர்" என்று இலக்கியம் என்னும் சொல்லுக்கும் மூலம் காட்டுவார் பாவாணர் (பாவாணர்.1967:90).

## பாவாணர்

"இலக்கணம், இலக்கியம் இரு சொற்களும் தென்சொற்களாதலால், தொன்றுதொட்டு நூலும் வனப்பும்என இருபாற்பட்டதமிழ்ச்சொற்றொகுதிகட்கே முறையே பெயராகி வழங்கி வந்திருக்கின்றன. இவற்றிற்கு நேர் வடசொற்கள் வியாகரணம் (வ்யாகரண),சாகித்தியம்(ஸாஹித்ய)என்பனவாகும்" (பாவாணர் 1967:295).

"இலக்கணம் என்னும் சொல்லே வடமொழியில் லக்ஷண என்று திரியும். இதற்கு மாறாக, மகன் தந்தையைப் பெற்றான் என்பது போல லக்ஷண என்னும் வடசொல்லே தமிழில் இலக்கணம் எனத் திரிந்தது என்று பல்கலைக்கழக அகராதியிற் குறித்திருப்பதும், இவ்வுலகிலேயே இலக்கண வரம்பும் வளர்ச்சியும் மிக்குப் பிறமொழிகட்கெல்லா மில்லாத பொருளிலக்கணம் பெற்ற தென்று பாராட்டப்படும் தமிழுக்கு இலக்கணத்தைக் குறிக்க ஒரு சொல்லுமில்லை யென்று தமிழ்ப் பகைவரான அயலார் கூறுவதை, ஆராய்ச்சியும் உரிமையுணர்ச்சியுமிக்க இவ்விருபதாம் நூற்றாண்டிலும் தமிழ்ப் புலவர் நம்பிக்கொண்டு அடங்கியிருப்பதும் விந்தையிலும் விந்தையே" என்று குறிப்பிட்டுள்ளார் பாவாணர்(2001:20).

## இலக்கு

கிராமர் (grammar) என்னும் இலத்தீனச்சொல் எழுத்துக்கலை என்னும் பொருளுடைய "கிரமடிகெ தெக்னெ" (grammatike techne) என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து உருவானதாகும். கிரேக்கமொழியில் எழுத்தைக் குறிக்கும் சொல் கிராம (gramma) ஆகும். அதாவது, கிரேக்கமொழியில் இலக்கணத்தைக் குறிக்கும் சொல் எழுதுதல் என்னும் அடிப்படையில் உருவாகியுள்ளது. இதையொட்டியே இலத்தீன மொழியிலும் பிற ஐரோப்பிய மொழிகளிலும் இலக்கணம் என்னும் பொருளையுடைய சொற்கள் உருவாகியுள்ளன. சமற்கிருதத்தில் இலக்கணத்தைக் குறிக்கும் வியாகரணம் என்னும் சொல் பகுத்தாய்தல் என்னும் அடிப்படையில் உருவாகியுள்ளது. ஆனால் தமிழில் இலக்கணம் வழக்கு, செய்யுள் ஆகிய இரண்டினையும் கணக்கிற்கொண்டு அமைந்திருந்தாலும் 'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே" என்னும் கூற்றுக்கிணங்க செம்மை வழக்கினையே இலக்காகக் கொண்டு அமைந்துள்ளது. கிரேக்கம், சமற்கிருதம் போன்ற மொழிகளில் காணவியலாத சிறப்பாகத் தமிழில் இலக்கியம், இலக்கணம் ஆகிய இரு சொற்களும் இலக்கு என்னும் பொது அடியிலிருந்து உருவாகியுள்ளன. இதைக்கொண்டு பந்தமிழில் இலக்கிய இலக்கண ஆய்வுகள் ஒருங்கிணைந்தே நடந்துள்ளன என்பதையும் இவை முறையே சிறந்த வாழ்க்கைக்கு, சிறந்த நடைக்கு இலக்குகளாக அமைந்துள்ளன என்பதையும் அறிந்துகொள்ளலாம்.

## மேற்கோள் நூல்கள்


1.) பாவாணர், 1967, வடமொழி வரலாறு, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி.

2.) பாவாணர், 2001, சுட்டுவிளக்கம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை

3.) Frank Palmer, 1983, Grammar, Penguin Books, England (First edition 1971)

# தமிழிசையின் நுட்பமும் இசைச்சொற்கள் மீட்பும்



இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா

உலகின் தொன்மொழியாய் மூத்த முது மொழியாய் விளங்கும் நம் அன்னைத் தமிழ் இயல் இசை நாடகம் என முத்தமிழாய்ப் பண்டை நாள் தொட்டே வழங்கப்படுவதை நாம் அறிவோம். முத்தமிழில் ஒரு தமிழே இசைத்தமிழ். அத்தகு இசைத்தமிழ் காலத்தால் ஏற்பட்ட பல்வேறு தாக்கத்தால் வடிவிழந்து கிடப்பதை உணர்ந்தே அதனை மீட்கும் வேணவாவில் தமிழிசை எனத் தனித்துச் சுட்டும் பணியைத் தமிழியல் தமிழிசை அறிஞர் செய்வாராயினர். இசை தமிழில் இருத்தலே தமிழுக்கு நலம். தமிழிசை வாழ்வுக்கு நலம்.

வரலாற்றில் ஏற்பட்ட பெருஞ்சரிவில் இசைத்தமிழும் இயைந்து சரிந்தது. இத்தகு சூழலிலும் தமிழியல் இலக்கியச் செல்வங்களாலும் மரபுசார் இசை வல்லுநர்களாலும் இசைத்தமிழ் காலந்தோறும் காக்கப் பெற்றே வந்துள்ளது என்பதையும் மறுக்க முடியாது. தொல்காப்பியம், கழக இலக்கியங்கள், சிலப்பதிகாரம், பிற்காலத் திருமுறைகளாகிய தேவாரப் பதிகங்கள் வரை இசைத்தமிழ் பேணப்பட்டுள்ளது எனலாம்.

பிற்காலத்தில் தியாகய்யரும், சியாமா சாஸ்திரியும், முத்துச்சாமி தீட்சிதரும் தோன்றுதற்கு 200 ஆண்டுகளுக்கு முன்பதாகவே தமிழ் இசையின் ஆதி மும்மூர்த்திகள் தோன்றிவிட்டனர். இவர்கள் தமிழர்கள்.

தமிழிசை மும்மூர்த்திகள் முழுக்க முழுக்கத் தமிழிலேயே பாட்டெழுதி இசையமைத்தனர். மேளக்கார இசையோடு பாடிய அந்த மூவரின் கீர்த்தனங்களையும் பதங்களையும் கேட்டே தியாகய்யர், சியாமா சாஸ்திரி, முத்துச்சாமி தீட்சிதர் ஆகிய கருநாடகச் சங்கீத மும்மூர்த்திகளின் இசை உருவெடுத்தது என்று சொன்னால் மிகையாகாது என்கிறார் இசைத்துறை அறிஞர் ப.தண்டபாணி அவர்கள்.

"ஆடிக் கொண்டார் அந்த வேடிக்கை
காணக் கண்
ஆயிரம் வேண்டாவோ"
"நாடித் துதிப்பவர் பங்கில் உறைபவர் நம்பர்
திருச்செம்பொன் அம்பலவாணர்"

என்பது கி.பி 1500–1600 காலக்கட்டத்தில் பிறந்த முத்துத்தாண்டவர் எனும் தமிழனின் பாடல்.

"காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே–
என்னைக்
கைத்தூக்கி யாள் தெய்வமே"

என்ற பாடல் கி.பி. 1712–1787 காலக் கட்டத்தில் வாழ்ந்த மாரிமுத்தாப் பிள்ளை எனும் தமிழனின் பாடலாகும். இப்பாடல்களைப் பழைய திரையிசைப் பாடகர்கள் எம்.எல்.வசந்தகுமாரி, டி.கே. பட்டம்மாள் முதலானோர் பாடியுள்ளதைக் கேட்டிருக்கலாம்.

கி.பி.1712–1779 ஆம் ஆண்டு காலக்கட்டத்தில் வாழ்ந்தவர்தான், தமிழில் முதன் முதலில் நாடகக் கீர்த்தனைகள் எழுதிய அருணாசலக் கவிராயர் ஆவார். இன்று தமிழ்க் கீர்த்தனங்களுக்கு முன்னோடிகளான இவர்களையும் இவர்கள் பாடல்களையும் புறந்தள்ளி விட்டு, 'வாதாபி கணபதி பஜே' என்றும் 'மரி மரி நின்னே முரளித' என்று சமற்கிருதத்திலும் தெலுங்கிலும் தமிழர்கள், தமிழ்க் குழந்தைகள் இசைபயிலும் நிலை ஏற்பட்டுள்ளது வருந்தத் தக்கதே.

தமிழரை எதிர்த்ததால் தமிழின மறுமலர்ச்சி இயக்கமும் தமிழை எதிர்த்ததால் தனித்தமிழ் இயக்கமும் தமிழிசையை எதிர்த்ததால் தமிழிசை இயக்கமும் தோன்றலாயின. பன்மொழிப் புலவர் கா.அப்பாதுரையார் அவர்கள், "தமிழ் இயக்கம், தமிழர் இயக்கம், தமிழிசை இயக்கம் என மூன்றாகப் பகுத்து, இம்மூன்றினுள் தமிழ் இயக்கத்தைத் தோற்றுவித்த பெரியார், பார்ப்பனருள் தமிழறிவும், தமிழ்ப் பற்றும் ஒருங்கே கொண்டவரான வி.கோ. பரிதிமாற்கலைஞர் ஆவர். அவரது தனித்தமிழ்ப்பற்றை உண்மைத் தமிழ்ப்பற்றை அவர் தம் பெயரைத் தமிழ்ப்பெயராக மாற்றிய ஒன்றினாலேயே அறியலாம். இரண்டாவது தமிழர் இயக்கம்; இதனைக் கலை வகையில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையும் சமய வகையில் மறைமலையடிகளும் அரசியல் வகையில் தந்தை பெரியார் அவர்களும் தோற்றுவித்து வளர்த்தனர். மூன்றாவது தமிழிசை இயக்கம். இஃது இலக்கிய வகையில் இசைத் திலகம் தி. இலக்குமணப் பிள்ளையாலும் துணைமை தலைமை வகையில் செட்டி நாட்டு மன்னர் பெருந்தகை அண்ணாமலைச் செட்டியார் அவர்களாலும் தோற்று விக்கப்பெற்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து ஓங்கி வருகின்றன."என்று தம் தமிழிசை வாழ்க எனும் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

எனவே முத்தமிழில் இசைத் தமிழ் இலக்கணத்தையும் பரவலையும் அழித்தொழிக்க முற்பட்ட சூழ்ச்சியின் விளைவாகத் தமிழிசையைத் தற்காக்க வேண்டும் எனும் வேட்கைத் தன்மானத் தமிழர்க்கு எழுந்ததில் வியப்பொன்றும் இல்லை. இருப்பினும் தமிழிசை மீட்சி முழுமைபெற்று விட்டதாக நாம் கருதிவிட முடியாது. இன்றளவும் தமிழ்க்குழந்தைகள் தெலுங்குச் சமற்கிருத பாடல்களையே பயிற்சியாகப் பயில்கின்றனர். பெரும்பான்மை இசைப்பெயர்கள் இன்று தமிழாக இல்லை,

கல்யாணி, காபி, கானடா,அம்சத்துவணி, மோகனம், பகேசுவரி முதலான பெயர்கள் வடமொழிகளாகவே உள்ளன. பழந்தமிழ் மண்ணில் 11,999 அராகங்கள் இருந்ததாக வரலாற்றுக் குறிப்புகள் காட்டுகின்றன. ஆனால் இன்று முந்நூற்றுக்கும் குறைந்தவையே வழக்கில் உள்ளன. பண்டை நாளில் இசை நுணுக்கம், பஞ்சமரபு, பெருங்குருகு, பெருநாரை முதலான இசைத்தமிழ் நூல்கள் இருந்ததாகச் சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் அடியாக்கு நல்லார் கூறியுள்ளார்.

இன்று மறைந்துவிட்டதாகக் கருதப்பட்ட 'பஞ்சமரபு' எனும் நூல் ஒன்றைத் தவிர ஏனைய நூல்கள் கிடைத்தில. 'சேறை அறிவனார்' யாழ் மரபு, வங்கிய மரபு (குழலியல்) கண்ட மரபு (குரல்) கூத்து மரபு (ஆடல்) தாள மரபு எனும் துறைகளைக் கொண்டு அவற்றுக்குரிய இலக்கணத்தை விளக்கி எழுதப்பட்ட நூலே பஞ்ச மரபு என்பதாகும். இதற்கு அந்நூலாசிரியர் இட்டபெயர் ஐந்தொகை என்பதே. 1917 ஆம் ஆண்டு தமிழிசை மேதை தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் எனும் பெருமகனார் கருணாமிர்த சாகரம் எனும் அரிய தமிழிசை ஆய்வு நூலை எழுதி வெளியிட்டார். கிடைத்தற்கரிய வரலாற்றுச் செய்திகளையெல்லாம் திரட்டி 1365 பக்கங்களில் இந்நூலை அப்பெருமகன் இயற்றியுள்ளது தமிழிசைக்குச் செய்த பெரும்பேறாகும்.

இனி,
சரிக மபதநியென் றேழுத்தாற் றானம்
வரிபரந்த கண்ணினாய் வைத்துத் – தெரிவரிய
வேழிசையுந் தோன்று மிவற்றுள்ளே
பண்பிறக்கும்
சூழ்முதலாஞ் சுத்தத் துளை'

எனும் சிகண்டி முனிவரின் பாடலில் குழலை அடிப்படையாகக் கொண்டு அதன் ஒலிக்குறிப்புகளைத் தமிழர்கள் ச ரி க ம ப த நி என்று எழுத்துக்களால் குறித்ததாகப் பொருள் விளக்கப்படுகின்றது. பண்டை நாளில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி,விளரி, தாரம் என்று இவ்விசை ஒலிகளுக்குப் பெயரிடப்பட்டுள்ளது. இதனை சுருக்கமாக கு து கை உ இ வி தா எனவும் வைத்துக் கொள்ளலாம் என்கிறார் பாவாணர். தமிழ் உயிர் நெடில் எழுத்துக்களான ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, எனும் ஏழையும் இவ்விசை ஒலிகளுக்குத் தமிழர்கள் குறியீடுகளாக அமைத்துள்ளனர். இக்காலத்திலும் பாடலில் ஆளத்தி (ஆலாபணம்) செய்யும்போது இக்குறியீடுகளைப் பாணர்கள் பயன்படுத்துகின்றனர்.

ச – குரல் – ஆ
ரி – துத்தம் – ஈ
க – கைக்கிளை – ஊ
ம – உழை – ஏ
ப – இளி – ஐ
த – விளரி – ஓ
நி – தாரம் – ஔ

என இவை தொடர்புபட்டுள்ளன.

இவ்வேழிசைப் பெயர்களும் ஏனைய தமிழிசைச் சொற்களும் மிக நுட்பான முறையில் தமிழில் அமைக்கப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

அவற்றில் ஏழிசைச் சுரங்கள் உட்பட ஏனைய சொற்களை இவ்வாறு விளக்கலாம்:

1. இசை > உல் > உய் = சேர்தல், பொருந்தல் கருத்து வேர் . உல்> உய்> இய்> இயை> இசை = மனத்திற்குப் பொருந்தி இயைந்தது ; ஏற்புடையது.

2. திஸ்ரம் > மும்மைத் தாளம் / முப்புடைத் தாளம்

3. சதுஸரம் > நான்மைத் தாளம் / நாற்புடைத்தாளம்

4. கண்டம் > ஐம்மைத் தாளம் / ஐம்புடைத் தாளம்

5. மிஸ்ரம் > எழுமைத் தாளம் / எழுபுடைத்தாளம்

6. சங்கீரணம் > ஒன்பான்மைத் தாளம்

7. பாகவதர் > இசைவாணர்

8. ஆலாபனை > ஆலாபு + அன் + ஐ. அகலமாய் விரித்து ஆகாரம் பாடுதல். ஆலாவு > ஆலாபு. அகலம் > ஆலம். ஆலம்> ஆலவனை> ஆலாவனை> ஆலாபனை.

9. டேக்கா > துள்ளுமம் ( இடம் விட்டுத் தட்டும் தாளம் தரிகிட த, தகதிமி த)

10. குரல் > உல்> குல் = சேர்தல் , கலத்தல், பற்றுதல் பொருள் வேர். ஏனைய எல்லாச் சுரங்களுக்கும் அடிப்படைப் பற்றாக விளங்கும் மூலச் சுரம் ( ஆதாரச் சுரம் ). குரல் = பற்று எனவும் பொருள்.
( ச = குரல் ~ ச > ஆ >> ச எனும் சுரம் தமிழ் ஒலியே. இதற்கு வடவர் வலிந்து சட்சமம் எனப் பெயரிட்டுக் கொண்டனர். ) யாழ் நரம்பிசைக் கருவியை அடிப்படையாக வைத்தே ஏழு சுரங்களும் கண்டறியப் பட்டுள்ளன. ஒவ்வொன்றும் குரல் எனும் மூலச் சுரத்தைப் பற்றித் தொடர்ந்தவை.

11. துத்தம் > உல் > உந்து = முன்னோக்கி உந்தித் தொடர்தல். உந்து > உத்து > துத்து > துத்தம். குரல் எனும் பற்றுச் சுரத்தைப் பற்றி சற்று முன்னோக்கி உந்திய இரண்டாம் சுரம். உதைத்தல் > துதைத்தல் = உந்தி எழும்புதல். ( ரி = துத்தம் ~ ரி > ரிஷபம் , ஈ > ரி , இரண்டாம் இடத்தில் தொடர்ந்து அமைந்த சுரம். வடவர் இதனை வலிந்து ரிஷபம் எனப் பெயரிட்டுக் கொண்டனர். )

12. கைக்கிளை > குரல் எனும் மூலச் சுரத்தோடு சிறு உறவு கொண்டு மூன்றாம் சுரமாக விளங்குவது. கை = சிறு , கிளை = உறவு , தொடர்பு . குரல் நரம்பிசையுடன் சிறிதாக உறவுற்று ஒத்திசைப்பது. ச –க } ச ரி க . ஊ > க = காந்தாரம்)

13. உழை > யாழில் குரலுக்கு அணைப்பாக பக்கத்து நெருங்கிய தன்மைத்தான சுரம். ச முதல் நரம்புடன் நாலாம் நரம்பாகிய ம கிளையாக பக்கத்தில் இருந்து ஒத்திசைப்பது. ச – ம . உல் > நெருக்கக் கருத்து வேர். உல் > உழை = பக்கம். உழைஞர் = உறவினர். அவனுழை = அவன் பக்கம்.
( ஏ > ம = மத்திமம் )

14. இளி > ஐ – ப பஞ்சமம் .. குரலோடு முதல் சுரத்தோடு மிக இணக்கமாக இசைந்து விளங்கும் சுரம் ப. ச– ப என்றே சுதி பிடிப்பர். இல் > இய்> இயை = இசைதல். உல்> இல் > இளி = இணங்கல் . இணங்கியிருக்கும் சுரம்.

15. விளரி > ஓ ~ த தைவதம். விள் = மென்மை/ விருப்பம். > விளி > விளித்தல் = மென்மையாய் அழைத்தல். விள் + அரி = விளரி= மென்மையாய் ஒலிப்பது. தாரம் எனும் மிக உயர்ந்த சுரத்தினின்றும் மென்மையாய் ஒலிப்பது.

16. தாரம் > ஔ – நி நிடாதம். உல்> துல்> தல் > தள் > தள்ளு. முன் தள்ளி இருப்பது. தல் > தால்> தார் = நீண்ட மாலை. தா= கையை முன் தள்ளி நீட்டிக் கொடுப்பது. நீண்டது மேல் நோக்கி உயரும். ஏழிசையில் உயர்ந்த உச்ச சுரமாக நரம்பாக இருப்பது தாரம்.

இவ்வேழு சுரங்களையும் பண்டைய தமிழர் விளக்கியுள்ளதைச் சிகண்டியார் மேற்கண்ட வெண்பா வடிவில் தெளிவுறுத்தியுள்ளார்.

முந்தை தமிழ் வடிவம் : குதுகைஉஇவிதா
ஏழிசை உயிரொலி : ஆஈஊஏஐஓஔ
ஏழிசை இயைபொலி : சரிகமபதநிச

இனி, ச ரி க ம ப த நி எனும் ஒலிக்குறிப்புகள் தமிழிலிருந்தே வடமொழிக்குச் சென்றதாகவும், தமிழ்ச் சாயலை மறைக்க ச எழுத்துக்குப் பகரமாக 'ஸ' எனும் கிரந்த எழுத்து பயன்படுத்தப் பட்டதாகவும் அறிஞர் ப.தண்டபாணியார் குறிப்பிடுகின்றார். 700 ஆண்டுகளுக்கு முன் வடமொழியில் சங்கீத ரத்தினாகாரம் என்னும் இசை நூலை எழுதிய சாரங்கத் தேவர் என்பவரே இவ்வேழு தமிழ்க்குறியீடுகளுக்கும் வடமொழிப் பெயர்களைப் புகுத்தி, இவ்வேழும் வடமொழியிலிருந்து வந்தன எனும் நிலையை ஏற்படுத்தினார்.

தமிழின் தாய் இராகங்கள் மொத்தம் 36 என்பதே பண்டை வழக்கு. அவை பல்வேறு சுரங்களாகத் திரிக்கப் பெற்று 72 ஆகப் பிற்காலத்தில் கூட்டப்பெற்றன.

தமிழ்ப்பண்களில் பல வடமொழி பெயரால் அழைக்கப்படுவதை முன்னரே கண்டோம். பண்டை நாளில் தமிழ்ப்பண்கள் பலவும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனும் ஐந்திணைகளை ஒட்டியும் பருவங்களை ஒட்டியுமே உருவாக்கப் பெற்றன. இனி, பண்டைய நாளில் இன்றைய அராகங்கள் சில எவ்வாறு அழைக்கப் பெற்றன என்பதைக் கவனிப்போம்.

பண்டைய தனித்தமிழ்ப் பெயர் இன்றைய பெயர்

1 செம்பாலை – அரிகாம்போதி
(அரி+காம்பு+ஓதி)~ தமிழே. அரி = வண்டு. வண்டு மூங்கிற் குழலில் துளையிட்டு ஊதுவதைப் போன்றது.
2 படுமலைப்பாலை – நடபைரவி
3 கோடிப்பாலை – கரகரப்பிரியா
4 விளரிப்பாலை – தோடி
5 செவ்வழிப்பாலை – இருமத்திமத் தோடி
6 முல்லைத் தீம்பாணி (சாதாரி) – மோகனம்
7 செந்துருத்தி – மத்தியமாவதி
8 இந்தளம் – இந்தோளம்
9 கொன்றையந் தீங்குழல்(கொல்லி) – சுத்த சாவேரி
10 ஆம்பலந்தீங் குழல் – சுத்த தன் யாசி
11 அரும்பாலை – சங்கராபரணம்
12 மேற்செம்பாலை – கல்யாணி

இவ்வாறு இன்றைய வடமொழிப் பெயர் கொண்ட தமிழ் அராகங்களை மீட்டெடுத்து தமிழில் இசை பயிற்சி மேற்கொள்ளும் காலம் வெகு தொலைவில் இல்லை எனலாம்.

மேற்கண்ட பண் வகைகளை நான்கு வகையான பாலைப் பண்களுக்குள் அடக்குவர். அவை,

1. ஆயப்பாலை
2. திருகோணப்பாலை

3. சதுரப்பாலை
4. வட்டப்பாலை

எனச் சொல்லப்பெறும். இவற்றுள் ஆயப்பாலையில் மட்டும் 14 பாலைகள் பிறக்கும்.

தமிழிசையின் ஏழு சுரங்களும் முடிவுற்றதும் ஒரு தொடர்வட்டம் போல அடுத்து மேலடுக்கு இடமாக தொடக்கச் சுரமே அமையும். இதனை எட்டாவது சுரத்தொடர் என்பர். ஆங்கிலத்தில் இதற்கு ஒக்டேவ் octave எனப் பெயர்.

ச ரி க ம ப த நி எனும் ஏழு சுர வரிசையை ஒவ்வொரு சுரத்திலிருந்தும் ஐந்தாவது சுரம் வரை பகுத்து வகைப்பாடு செய்வர். இதற்குத் தமிழிசையில் வண்ணப்பட்டடை எனப் பெயர். மேற்கத்திய இசை முறையிலும் இம்முறை பரவியுள்ளது. ஆங்கிலத்தில் இதனை cycle of fifth என்பர்.

இதனைக் கீழ்க்கண்டவாறு அடுக்குமுறை செய்யலாம்...

1. ம ப த நி ச > ம – ச
2. ரி க ம ப த > ரி – த
3. த நி ச ரி க > த – க
4. க ம ப த நி > க – நி
5. நி ச ரி க ம > நி – ம

குரலை முதலாகக் கொண்டு ஐந்து ஐந்து சுரங்களாகப் பகுத்து ஏழு சுரங்களையும் அடுக்கினால் கீழ்க்காணுமாறு சுர அமைப்பு அமையும்.

1. ச ரி க ம ப ( ச – ப )
2. ப த நி ச ரி ( ப – ரி )
3. ரி க ம ப த ( ரி – த )
4. த நி ச ரி க ( த – க )
5. க ம ப த நி ( க – நி )
6. நி ச ரி க ம ( நி – ம )
7. ம ப த நி ச ( ம – ச)

இவ்வாறான அடுக்குமுறை வாயிலாக ஏழு இயல்பான சுரங்களும் ஐந்து மாறுபட்ட சுரங்களும் பிறக்கும். இவை மொத்தம் 12 என வகைப்படுத்தியுள்ளனர் தமிழிசை அறிஞர்கள். ஏழிசைச் சுரங்களில் குரலும் இளியும் மாறாச் சுரங்களாகும். ஏனையவை இரண்டு இரண்டாக மாற்றம் பெறுவன.

ச ரி1 ரி2 க1 க2 ம1 ம2 ப த1 த2 நி1 நி2

கிரேக்க கணக்கியல் மேதையான பித்தோகரசு தமிழ்நாட்டிற்கு வந்து தமிழர் வகுத்த ஏழ்பெரும் பாலைகளை ஆய்ந்து தம் கிரேக்க நாட்டு இசையைத் திருத்தி அமைத்தார் என வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன. இவர் தமிழரின் இட முறைத்திரிபு இசைமரபு முறையினைப் பின்பற்றி அரும்பாலை எனும் சங்கராபரணத்தை Lydic (C major diatonic scale) என்று தம் நாட்டில் வடிவமைத்துள்ளார். அதுமட்டுமல்லாமல் அவர் கணித உலகிற்கு அறிமுகப்படுத்தியதாகக் கூறப்படும் வட்டத்திற்குரிய TT (பை) என்னும் குறியீட்டின் அளவு தமிழரின் தமிழிசை கணக்கிலிருந்து பெறப்பட்டதேயாகும். நீர் நிறைந்த ஒரு குளத்தில், ஒரு கல்லை எடுத்துப் போட்டால் வட்டவட்டமாக நீர் அலை பரவுவதைக் காணலாம் இதே போல்தான் இசையிலும் ஒலிவட்டமாக எழும்பும் எனத் தமிழிசை வல்லுநர்கள் கண்டறிந்துள்ளனர்.

இம்முறையே குரலில் தொடங்கி இறுதியில் தாரத்தில் நிறைவுறாமல் மீண்டும் அடுத்த உயரிடத்தில் குரலில் தொடர்ச்சியாய் ஒரு வட்டமுறையில் இணைவதாக முன்பே இக்கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வடிப்படையிலேயே வட்டப் பாலைமுறை உருவாகியது. இவ்வட்டப்பாலை முறையில் 7 சுரங்களையும் 22 சுருதிகளாக அமைத்தனர் தமிழர். ஒரு வட்டத்தின் குறுக்களவுக்கும் சுற்றளவுக்கும் தொடர்புள்ளதாகையால் வடிவக்கணக்கிற்கு இம்முறை பெரிதும் பயன்பட்டது. இதனை 22/7 என்றே வகுத்து வைத்தனர். இதனையே பித்தோகரசு தம் கணக்கியல் கோட்பாடுகளுக்குப் பயன்படுத்தினர். மார்கிரேட் ஈ. கசின்சு எலார் Margaret E. Cousins தம் the music of orient and occident எனும் நூலில்.

"It is historical fact, however, that about 500 B.C. Pythagoras after his travels in India Systematized the primitive music of his times and gave it new vitality by standardizing its sound combinations into seven scales which were developed downwards, not up wards, in selections of the combinations and

permutations of seven sounds out of the twelve semitones in an octave which have formed ever since the fundamental sound substance of European music. These seen scales are identical with seen of the Melakatas (scales) used in south Indian music, and it is note worthy that Strabo has written that Pythagoras was influenced by India in the reforms and developments he made in the music of his time " என்று குறிப்பிடுகிறார்.

தமிழிசை அமைப்பு முறையைப் பின்பற்றியே தம் நாட்டு இசைக்கருவியான இலயரில் ஏழோடு மேற்கொண்டு ஒரு நரம்பைக் கூட்டி எட்டு நரம்புகளாக அமைத்தார் பித்தோகரசு இது கிரேக்கத்தில் செய்யப்பெற்ற புரட்சியாகவே கருதப்படுகிறது. உலக மக்கள் பலரும் தமிழிசையைப் பின்பற்றியுள்ளனர் என்பதற்கு இஃது ஒரு சான்று. அத்தமிழிசையை அழியாமல் தலைமுறைதோறும் காக்க வேண்டியது தமிழுணர்வுமிக்க , மானமுள்ள தமிழர்களின் கடமையாகும். தமிழிசை இயக்கம் மீண்டும் வரலாறு படைக்கத் தமிழராகிய நாம் அயல் மொழித் தாக்கத்தை அகற்றுவோம்.

## சொற்பொருளாராய்ச்சி

**தாராளம்**

தார் – சேனை. ஆளம் = தன்மை. தாராளம் = படைமறவர் போல், விருப்பம் போலப் பிறர் பொருளைக் கையாடுதல் அல்லது வழங்கல். இன்றும் படைமறவர் பிறர்பொருளை மனம்போற் பயன்படுத்தலும் கொள்ளையடித்தலும் காண்க.

**தாயமாடல்**

தாய் + அம் = தாயம் = தாயினின்று பெறும் உரிமை. ஆடல் = விளையாடல். தாயமாடல் = சீட்டுப் போடுவதுபோல் முத்தும் பலகறையும் போட்டு உடன்பிறந்தார் பாகம் பிரித்தல்; முத்தினாலும் பலகறையாலும் விளையாடிப் பிறர் உரிமையைப் பெறுதல் அல்லது பறித்தல்; தாயமாடிக் காலத்தை வீண்போக்குவதுபோல் வேலை செய்யாமற் காலங் கழித்தல் அல்லது தாழ்த்தல் ; 'வேலை தாயமாடுகிறது' என்னும் வழக்கை நோக்குக.

**ஏராளம்**

ஏர் = கலப்பை. ஆள் + அம் = ஆளம் = ஆளின் தன்மை. ஏராளம் = உழவன் வருவாய்போல் மிகுதியாயிருத்தல். உழவன் நேரடியாயும் மிகுதியாயும் உணவுப் பொருளை விளைவித்தலின் பொருள் மிகுதி ஏராளமெனப்பட்டது. அம் மிகுதியினாலேயே உழவன் வேளாண்மை செய்து வேளாளனாயினன். "வேளாள னென்பான் விருந்திருக்க உண்ணாதான்" (திரிகடு. 12)

ஞா. தேவநேயப் பாவாணர் – மொழியாராய்ச்சிக் கட்டுரைகள்

# கொழுப்பு வகைகள்

இலக்குவனார் திருவள்ளுவன்
தலைவர் – தமிழ்க் காப்புக் கழகம்



கொழுப்பு (2), நிணம் (24) சொற்களுடன் இறைச்சிக்கொழுப்பைக் குறிக்கும் பிறதொடர்களும் சங்கஇலக்கியங்களில் உள்ளன. இப்பொழுது பின்வருமாறு கொழுப்பின் வகைகள் குறிக்கப்படுகின்றன.

கொழுப்பு – lipid (வேளா., பயி., சூழி.,மீனி.,மனை.,கால். ) ;
fat (வேளா., மனை.,மரு.);
adipose ( பயி.,);
cholesterol ( மரு.);
கொழுப்புஅமிலங்கள்–triglycerides (மனை.);
உயர்மாவுச்சத்து – triglycerides ( மரு.).

இப்பொழுது நாம்அமிலம் என்றுசொல்வதைச் சங்கஇலக்கியங்கள்காடி(6) என்றே குறிப்பிடுகின்றன. ஆதலின் சங்கச் சொற்கள் அடிப்படையில் கொழுப்பு வகைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

நிணம் – cholesterol

கொழுப்பு – fat

கொழுமை – adipose

கொழுமைமெய்ம்மி – adipose tissue

கொழுமியம் – lipid

கொழுப்பி – kinch

முந்நெய்மை – triglycerides

வெளிப்புறகொழுமியம் – surface lipid

எளியகொழுமியம் – simple lipid

கூட்டுக்கொழுமியங்கள் – compound lipids

வருவிக்கொழுமியங்கள் – derived lipids

செறிகொழுப்பு – saturated fat

கொழுப்புக்காடி – fatty acid

செறிகொழுப்புஅமிலம் – saturated fatty acid

செறிவுறாக் கொழுப்புக்காடி – unsaturated fatty acid

முதன்மைக் கொழுப்புக்காடிகள் – major fatty acids

முதிராக்கொழுப்பு – crude fat

விலங்குக்கொழுப்பு – animal fat

நொதுமல்கொழுப்பு – neutral fats

கொழுப்புக்கரைஉரனிகள்– fat–soluble vitamins

செறிவுறாப் பன்னிலைக் கொழுப்புக்காடி – poly unsaturated fatty acid

கொழுமிகை (பருவுடல்) – obesity

கொழுமிய ஈரடுக்கு – lipid bilayer

கொழுமிய உயிரியச்சேர்மி– lipid biosynthesis

கொழுமியக் குமிழி – lipid vesicle

கொழுநெய்– fatty oil

கொழுநெய் விதை – fatty oil seed

கரை கொழுமியம் – soluble lipid

படலக் கொழுமியம் – membrane lipid

கொழுப்பு நீர்மவினைமி – fat liquoring agent

புலனாகாக் கொழுப்பு – invisible fat

மீநிலைக் கொழுமியம்– hyperlipidemia

மீநிலை முந்நெய்மை – hypertriglyceridemia

மீநிலைக் கொழுமியப்புரதம் –hyperlipoproteinemia

பால் கொழுமியம் – galacto lipid

நிணக்கல் – cholesterol stone

நிண மிகை – cholesterolemia

வெண்ணெய்க் கொழுப்பு – butter fat

குருதிநிணம் – blood cholesterol

குருதிக் கொழுமியம் – blood lipid

கொழுமைஉயிர்மி– adipose cell

கொழுமையுடைமை – adiposity

உயரடர் கொழுமிப்புரதம் – high density lipo protein

கொழுப்பு உயிர்மி – fat cells

கொழுமிப் பெயர்வு – lipid migration

குறையடர் கொழுமிப் புரதம் – low density lipo protein

நீள்தொடர் முந்நெய்மை – long chain triglyceride

குருதிநீர்மக் கொழுமியம் – plasma lipids

கொழுப்புஉரு அமைவு – plasticity of fats

ஊனீர்நிணம் – serum cholesterol

கட்புலக்கொழுப்பு – visible fat

கொழுமிச்சிதைவு – lipolysis

கொழுப்புநொதி – lipase

மென்கொழுப்பு – soft fat

மடிக்கொழுப்பி – udder kinch

கொழுப்புச்சுரப்பி – sebaccous gland

கொழு, கொழுப்பு, நிணம், என்னும் சங்கச் சொற்களின் அடிப்படையில் அடிப்படைக் கலைச் சொற்களைக் குறிப்பிட்டிருந்தாலும் பிற இடங்களில் வேறுபாடின்றிக் கொழுப்பு என்றே பயன்படுத்துவர். எனவேதான் இங்கே வேறு சில கலைச் சொற்களும் தரப்பட்டுள்ளன. இவை தொடர்பான அனைத்துச் சொற்களையும் குறிப்பிடின் பலநூறுகளைத் தாண்டும். எனவே, அடையாளமாகத்தான் சில குறிக்கப்பெற்றுள்ளன. இங்குள்ள சொற்களின் அடிப்படையில் பிற சொற்களையும் உணர்ந்து பயன்படுத்தலாம்.

# அசையும் இசையும்!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"கல்லும் இசையால் கனியாகும்
முள்ளும் அதனால் மலராகும்
உள்ளம் உருகும் பண்பாடும் – அந்த
ஓசையிலே நாகம் நின்றாடும்."
(வாலி, கல்லும் கனியாகும்).

------------

ஊமையாக இருந்தவன் கத்தினான்; உரக்கக் கத்தினான்; மென்மையாகக் கத்தினான்!
கத்தியவன் பேசினான்; பேசியவன் பாடினான்!

டம டம டம டம டம என்று பறை தட்டினால்
ஓசை!
டம்டம, டம்டம, டம்டம, டம்டம;
டம்டம்டம, டம்டம்டம, டம்டம்டம;
டம்டம்டமடம, டம்டம்டமடம, டம்டம்டமடம
எனத் தட்டினால் இசை!
ஓசை – ஓர் ஒழுங்கில் அமைந்தால் இசை!
அதனால் தான் நேர் அசை, நிரை அசை!
(binary codes!)

"நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலா என்று காட்டுகின்றாய் ஒளிமு கத்தை!
கோல முழுதும் காட்டி விட்டால் காதல்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்த தனிப் பூவோ நீ தான்
சொக்க வெள்ளிப் பால்குடமோ, அமுத ஊற்றோ
காலை வந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல் மாறிக் குளிர் அடைந்த ஒளிப்பி ழம்போ?"
(பாவேந்தர்).

இந்த 'காய் காய் மா தேமா' என்ற அமைப்பிலான எண்சீர் மண்டிலத்தில் முதற் சீரே 'நேர் நிரை' என்று அமைந்து காய்ச் சீருக்கு ஓர் அசை குறைவாக உள்ளது. இந்த ஓர் அசையை இட்டு நிரப்பிப் பாவேந்தர் 'நீலவான ஆடைக்குள் உடல்ம றைத்து' என எழுதியிருக்கலாம்!
யாப்பிலக்கணப்படி தவறாகாது.
ஆனால், தமிழுக்கே உரிய இசையிலக்கணம் அதாவது செவி நுகரும் இனிமை இலக்கணம் கெட்டுவிடும்.

'நீலவான' என்பதைக் 'கூவிளங்காய்ச்' சீர் என்று அலகிடுவோம்.
ஆனால், உண்மையில் அது யாப்பிலக்கணம் சுட்டாத 'விளாங்காய்ச்' சீராகும்.
விளங்காயா? விளாங்காயா?
விளாங்காயாக விட்டிசைப்பதை விடக் கூவிளமே சிறந்த இசைநயம் தரும் எனப் பாவேந்தர் எண்ணியிருப்பார் போலும்!
ஆகவே 'நீலவான்' அமைந்தது.
அசையா இசையா என்ற வினா எழுந்தால் இசை நுட்பமே முதலிடம் பெறுதல் வேண்டும்!
இனிமையே தமிழ்!

'காலைவந்த' என்னும் சீரைக் 'காலை வந்த' எனப் பிரித்தால் தேமா தேமா என இரண்டு சீர்களாகிவிடும்.
'லை' என்பதை ஐகாரக் குறுக்கமாக்கி ஒரு மாத்திரை அளவே ஒலிப்பதனால் கூவிளங்காய்ச் சீராகி இலக்கணமும் இசையும் கெடாமல் அமைகிறது.
'இனிமைத் தமிழ்மொழி எமது' அன்றோ?

வெண்பா ஒன்றின் ஈற்றடியாகப் பாவலர் ஒருவர் எழுதியிருந்தார்:
'இந்தமண்ணில் வேறுண்டோ ஈடு?"

கூவிளங்காய் தேமாங்காய் காசு – வெண்டளை தட்டாத ஈற்றடி தான்.
ஆனால், 'இந்தமண்ணில்' என்பது 'இந்த', 'மண்ணில்' எனப் பிரிந்திசைக்கும் போது ஓசை நயம் சற்றே பிசிறு தட்டுவது போல இருக்கும்.
இந்த ஈற்றடியைச் சற்றே மாற்றி 'இம்மண்ணில் வேறுண்டோ ஈடு?" என எழுதிடின் யாப்பிலக்கணம் முன்போலவே அமைந்து வெண்டளை சிறக்கும்; ஓசைநயம் மிகும் என்பது என் கருத்து.

எடுத்துக் காட்டாக,
'வையத்தில் சான்றோர்கள் வாழ்த்தியுனைப்
போற்றுமாறு
செய்திடுக நல்ல செயல்'
என்று குறட்பா எழுதினால் வெண்டளை இலக்கணப்படி தளை தட்டாது; ஆனால் இசை தட்டும்.
இதைச் சற்றே மாற்றி 'வாழ்த்தியுனைப் போற்றிடவே' என்று திருத்தினால் கூவிளாங்காய் கூவிளங்காய் ஆகிவிடும்.

இன்னொன்று பலருடைய பாக்களில் நான் காண்பது.
குற்றியலுகரம் + உயிர்.
'உயிர் வரின் உக்குறள் விட்டு ஓடும்'

எடுத்துக் காட்டாக,
'எந்நாளும் உன்னுடனே வருவேன் சேர்ந்து
என்னைநீ ஏற்றிடுவாய் மனங்க னிந்து' என்று எழுதும் போது 'சேர்ந்து + என்னை' என்பது சேர்ந் தென்னை' என்று ஆகிவிடும். அதாவது 'சேர்ந்து' என்னும் தேமாச் சீர் 'சேர்ந்' என ஓர் அசை கெட்டு, அதனால் இசை கெட்டு நிற்கும்.
இப்படி அசையும் இசையும் கெடாமல், சொல்லும் பொருளும் மாறாமல், உயிர் ஓடாது இருக்க ஓர் எளிய மருத்துவம்:
(உன்னுடனே / உன்னுடன்நான்) வருவேன் 'சேர்ந்தே'... மனங்க 'னிந்தே' என்று 'ஏ'காரம் சேர்த்துவிடலாம்!
இசைகெடாது! அசைபோட்டால் பாடல் இனிக்கும்!
படிப்போரும் பாட்டை அசை போடுவர்!

"சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்!
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்."
(திருப்பாவை).

வெண்டளை பிறழாது எழுதப்படுவனவே பாவை நூலில் அமையும் இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பாக்கள்.

வெண்பாவில் ஓரடியின் இறுதிச் சீரும் அடுத்த அடியின் முதற்சீரும் வெண்டளையால் பிணிக்கப்பட வேண்டும்.
ஆனால், பாவை நூலில் வரும் கொச்சகக் கலிப்பாக்களில் இது கட்டாயம் இல்லை எனப்படுகிறது.

மேற்கூறிய பாடலின் நான்காவது அடியின் இறுதிச் சீர் 'போகாது', அடுத்த அடியின் முதற்சீர் 'இற்றை' என்பது.
'போகா திற்றை' எனப் புணர்த்தெழுதி அலகிடும்போது 'தேமா தேமா' என்றாகி, 'மா முன் நேர் – நேரொன்றாசிரியத்தளை' ஆகிவிடும். ஆதலின் அடிகளைத் தனித்தனியாக அலகிட்டால் போதுமெனக் கூறுவர்.

செவிகளே தமிழ் யாப்பின் இலக்கணம்.
காதுக்கு இனிமை பயந்தால் பாடல்.
'நேர் நிரை, காய் கனி' எனச் செய்யப்பட்டால் அது செய்யுளாகிவிடும்.
இயற்கைத் தோய்வும் இனிய உணர்வும் இணைந்து எளிய சொற்களில் கனிந்து வெளிப்படுவது நல்ல பாடலாகும்.

பாடல் கேட்டார்ப் பிணிக்கும் தகையதாய் அமைய வேண்டும். கேட்டார் பிணிப்பதாக அமைந்துவிடக் கூடாது!

சொல்லும் பொருளும் ஓசையும் சந்தமும் பிரியாமல் ஒன்றிணைந்து வெளிப்படின் சிறந்த பாடலாகும்!
இசை – இயை – இழை – இணை!

"Poetry is music in words, and music is poetry in sound."
– John Fuller.
"Rhythm is a part of the structure of a poem unless the poem is written in free verse. Poetry is a craft that requires purposeful construction. The rhythm of a poem gives it its flow and beat, so rhythm is a very critical component of well-written poems."
*****
ஓசை நுகர்தல், முகர்தல் – (காற்றில் வரும் இசைக் குறிப்பை) முகத்தல் – (காது, கண், மூக்கு வாய் என்னும் புலன்களால் முகக்கும்)
முகம் – மூம் – மூஞ்சி > muzzle – muse – music!
இதற்கான வேர்ச்சொல் தெரியவில்லை எனக் கூறப்படுகிறது.

muse (v.)
"to reflect, ponder, meditate; to be absorbed in thought," mid-14c., from Old French muser (12c.) "to ponder, dream, wonder; loiter, waste time," which is of uncertain origin; the explanation in Diez and Skeat is literally "to stand with one's nose in the air" (or, possibly, "to sniff about" like a dog who has lost the scent), from muse "muzzle," from Gallo-Roman *musa "snout," itself a word of unknown origin. The modern word probably has been influenced in sense by muse (n.). Related: Mused; musing.

ஆழ்ந்து ஆராய்தல் என்னும் பொருளதான உன்னுதல் – முன்னுதல் என்பது muse (< music) என்னும் பெயர்ச்சொல்லின் வேராக அதாவது இந்தைஐரோப்பிய மூலமாக 'முன்' காட்டப்படுகிறது.

Muse (n.)
late 14c., "one of the nine Muses of classical mythology," daughters of Zeus and Mnemosyne, protectors of the arts; from Old French Muse and directly from Latin Musa, from Greek Mousa, "the Muse," also "music, song," ultimately from PIE root *men- (1) "to think." Meaning "inspiring goddess of a particular poet" (with a lower-case m-) is from late 14c

# புறநானூற்றில் எறும்பியல் / பேரிடர் மேலாண்மை / ஒழுங்கியல்



பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

பழந்தமிழர் இயற்கையோடு இயைந்து இன்வாழ்வு வாழ்ந்தனர்; அதோடு இயற்கையிலிருந்து விழுமியங்களை வகுத்தனர். அம்முறையில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பாடிய புறநானூற்றின் 173ஆம் பாடல் எறும்பியலை / பேரிடர் மேலாண்மையை / ஒழுங்கியலைச் சுட்டுகின்றது. கீழ்வருகின்ற விக்கிபீடியா விளக்கத்தைக் கருதுக.

எறும்பியல் (Myrmecology) என்பது, எறும்புகள் பற்றி அறிவியல் அடிப்படையில் ஆயும் துறையாகும். இது பூச்சியியலில் ஒரு கிளைத் துறை ஆகும். எறும்புகள் சிக்கலான சமூக அமைப்பைக் கொண்டுள்ளதால், சமூக முறைமைகளின் படிமலர்ச்சி குறித்து ஆய்வு செய்வதற்கான மாதிரியாக இன்றும் எறும்புகள் திகழ்கின்றன.

### எறும்பியலின் முதன்மைக் கூறுகள்

- சமூக அமைப்பு

எறும்புகளின் சமூக அமைப்பு மிகவும் சிக்கலானது. இதில், இராணி, ஆண் எறும்புகள், மற்றும் பெண் எறும்புகள் என்று பல படிநிலைகள் உள்ளன.

- சமூக நடத்தை

எறும்புகள் ஒருங்கிணைந்து செயல்படும் திறன், தகவல் தொடர்பு, மற்றும் கூட்டு வேலை ஆகியவை சமூக நடத்தைகளாகும்.

- உயிர்ச் சூழல் பன்முகத் தன்மை

எறும்புகள் பல்வேறு வகையான வாழ்விடங்களில் வாழ்கின்றன.

- உயிர்ச் சூழல் பங்கு

எறும்புகள் பலவிதமான சூழல்மண்டலங்களில் முக்கியப் பங்கு

வகிக்கின்றன, உதாரணமாக, மண் வளத்தை மேம்படுத்துதல், விதைகளைப் பரப்புதல், மற்றும் மற்ற பூச்சிகளைக் கட்டுப்படுத்துதல் போன்றவை.

- உயிரியல் பாதுகாப்பு

எறும்புகளின் பன்முகத்தன்மை மற்றும் உயிரியல் பாதுகாப்பு ஆகியவை பற்றிய ஆய்வு, உயிர்ச்சூழல் பன்முகத்தன்மையை பாதுகாக்கவும், உயிரியல் பாதுகாப்பை உறுதிப்படுத்தவும் உதவுகிறது.

மேற்படி விளக்கத்தால் மனித நடத்தையை ஆராய எறும்பியல் துணையாவது உணரப்படும். இவ் அடிப்படையில், சிறுகுடி கிழான் பண்ணனின் உணவளிக்கின்ற உயர்வறத்தைப் போற்றுகின்ற புறநானூற்றின் 173ஆம் பாடலின் கீழ்வருகின்ற 05, 06, 07 ஆகிய அடிகள் நோக்கத்தக்கன.

"பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வன்புலம் சேரும்,
சிறு நுண் எறும்பின் சில் ஒழுக்கு ஏய்ப்ப"

இவ்வடிகளில் மழை மேகத்தைக் கண்டவுடன் பள்ளத்தில் வாழ்ந்த எறும்புகள் முட்டையைத் தூக்கிக்கொண்டு பாதுகாப்பான மேட்டை நோக்கி வரிசையாக ஊர்கின்றன என்னும் பேரிடர் மேலாண்மையை / பாதுகாப்பு உணர்வை / ஒழுங்கியலை அறியமுடிகின்றது. பேரிடர் நேரும்போது அரசு இத்தகைய அறிவிப்பை விடுப்பது இவண் கருதத்தக்கது.

இங்ஙனம் இலக்கியங்கள் பல்துறைச் செய்திகளின் உறைவிடமாகத் திகழ்ந்து, மானுட மேன்மைக்கும் வெற்றிக்கும் வாய்ப்பாவது அறிந்து பயன்கொள்ளத் தக்கதாகும்.

நன்றி : இணையத் தரவுகள்

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 179–180ஆம் கூட்டங்கள்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 179,180ஆம் கூட்டங்கள் முறையே 24.04.2025, 25.04.2025 ஆகிய இருநாள்கள் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது.

மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் கலந்துள்ள பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பெற்று வல்லுநர்களின் ஒப்புதலுக்குப் பின் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்தவகையில் 24.04.2025, 25.04.2025 ஆகிய இருநாள்கள் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 179, 180ஆவது கூட்டங்களில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை,

திரு. அ.மதிவாணன், 'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ. அரிமாப்பாமகன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர்

நா. சுலோசனா மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இவ்விரு கூட்டங்களிலும் சேர்த்து மொத்தம் 348 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.




**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில**

| | |
|---|---|
| Anthropogenic emission | மாந்தவினை மாசு உமிழ்வு |
| Aquifer recharge | நிலநீரூட்டம் |
| Biodiversity Hotspot | பல்லுயிர் இயங்கிடம் |
| Biological corridor | உயிரியல் வழித்தடம் |
| Carbon Pricing | கரிம விலையீடு |
| Climate Adaptation | காலநிலைத் தகவமைப்பு |
| climate emergency | காலநிலை நெருக்கடி |
| Climate Mitigation | காலநிலைத் தணிப்பு |
| Extreme weather events | வானிலைப் பேரிடர் |
| Habitat Loss | வாழிட இழப்பு |
| Marine Life | கடல் வாழி |
| Methane emission | ஈரவளி உமிழ்வு |
| Non point source pollution | பன்முனை மாசு |
| Best Before Date | பயன்நாள் |
| Chemical Contamination | வேதி மாசுபடுத்தல் |
| Edible Packaging | உண்தகு உறை |
| Food Traceability | உணவுத் தடமறிதல் |
| Fortified Foods | செறிவூட்டிய உணவுகள் |
| High Risk Food | உயரிடர் உணவு |
| Nutrient Content | ஊட்ட உள்ளடக்கம் |
| Nutritional Value | உணவூட்ட மதிப்பு |
| Pathogen Testing | நோயீனி ஆய்தல் |
| Ultra Processed Food | மீப்பதன உணவு |
| Bio cup | மட்கும் குவளை |

# துறைசார் கலைச்சொல் கலந்தாய்வுக் கூட்டம்



2021–2022ஆம் ஆண்டு சட்டப்பேரவை அறிவிப்பின்படி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், திங்கள்தோறும் ஒவ்வொரு துறைசார்ந்த புதிய கலைச்சொற்களை அந்தந்தத் துறைசார்ந்த வல்லுநர்களின் உதவியோடு வடிவமைத்து இணைய வழியில் அறிமுகம் செய்யும் கலந்தாய்வுக் கூட்டங்கள் நடத்தப்பட்டு வருகின்றன.

அந்தவகையில் சென்னை கிண்டியிலுள்ள லோக் ஆயுக்தா அலுவலகத்தில் 06.05.2025ஆம் நாளன்று நடைபெற்ற கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க.பவானி, லோக் ஆயுக்தா அமைப்பின் செயலாளர் திரு. தங்கமாரியப்பன், பதிவாளர் திரு. சிவ. பாண்டியன், உதவிப் பதிவாளர் திரு. ஆ. தனசேகரன், பிரிவு அலுவலர் திரு. சு.சிவகுருநாதன், கலைச்சொல்லாக்க வல்லுநர்கள் முனைவர் ஆ.அரிமாப்பாமகன், முனைவர் சா.இராமு, முனைவர் மு.முத்துவேலு, முனைவர் மா.பூங்குன்றன் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர். திட்ட ஒருங்கிணைப்பாளர் திரு. வே.பிரபு வரவேற்பு (ம) நோக்கவுரையாற்ற, சார்பு செயலாளர் திரு. சி. அருண் நன்றியுரை கூறினார்.

கூட்டத்தின்போது கலந்தாய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட கலைச்சொற்களுள் சில:

| | | | |
|---|---|---|---|
| Lokayukta | மக்கள் அதிகார அமைப்பு | Extortion | வலுக்கட்டாயமாக |
| Swindling | பணச் சுரண்டல் | Malfeasance | சட்டமுரண் பிழை |
| Non–Est | இன்மை / வெறுமை | Demitted | பணி நீங்கல் |
| Mens–Rea | குற்றமனம் | Crackdown | முறியடிப்பு |
| Modus – Operandi | செய்முறைமை / வினைமுறை | Litigation | வழக்காடல் |
| Amicus – Curiae | நீதிமன்றக் கருத்துரைஞர் | Felony | கொடுங் குற்றம் |
| Aspire | விரும்பு / விழை/ ஆசைப்படு | Misdemeanour | தகா நடத்தை /தகாச் செயல் |
| Undeserved Community | தகுதியுரிமைப்பெறா வகுப்பினர் | Mazdoor | கடைநிலைப் பணியாளர் |
| Disproportionate | விகிதச் சமமற்ற / அளவொவ்வாத | Senior Most | மிகு முதுநிலை |
| Impulsive | அகத்தூண்டலான | Super Senior | மிகுமுதுமை |
| In Limine | எடுத்த எடுப்பிலேயே | | |

# வேளாண்மைக் கலைச்சொல் அகராதி அலுவல்சார் குழுக் கூட்டம்




தமிழ் வளர்ச்சித் துறையின் 2022-2023ஆம் ஆண்டிற்கான மானியக் கோரிக்கையின்போது,

"வளர்ந்துவரும் நவீன தொழில்நுட்பத்திற்கேற்ப அனைத்துத் தளங்களிலும் தமிழ்ப் பயன்பாட்டினை அதிகரிக்கச் செய்யும் வகையில் மருத்துவம், பொறியியல், தொழில்நுட்பம் பேன்ற துறைகளில் பயன்படுத்தப்படும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொற்கள் உருவாக்கம் செய்வதற்காகத் தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து துறைசார் வல்லுநர்களைக் கொண்ட குழுக்கள் அமைத்து, புதிய கலைச்சொல் அகராதிகள் உருவாக்கப்படும்." என்று அறிவிக்கப்பட்டு அரசாணை வெளியிடப்பட்டது.

அவ்வரசாணைக்கிணங்க 2025-2026ஆம் நிதியாண்டிற்கு வேளாண்மைக் கலைச்சொல் அகராதி உருவாக்கத் திட்டமிடப்பட்டு, அதுதொடர்பில் அலுவலர்சார் குழுவின் முதல் கூட்டம் 07.05.2025ஆம் நாளன்று செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க.பவானி வரவேற்பு (ம) நோக்கவுரையாற்ற, வேளாண்மைத் துணை இயக்குநர் (பல்வகை) திருமதி வெ. புனிதவதி, தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல்துறைத் தலைவர் முனைவர்

செ. ஜாக்குலின் ஆகியோர் நேரிலும், தமிழ்நாடு பாடநூல் (ம) கல்வியியல் பணிகள் கழகத்தின் இணை இயக்குநர் முனைவர் தே. சங்கர சரவணன் இணையவழியிலும் கலந்துகொண்டு வேளாண்மைக் கலைச்சொல் அகராதியைச் செம்மையுற வெளிக்கொணர்வதற்கான கருத்துரைகளை வழங்கினார்கள்.

இக்கூட்டத்தில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள், நிருவாகப் பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.